சிவமயம்.

# ஸ்ரீ காளத்தியீசர் சமேதர் தோத்திரம்.

இஃது

திருவண்ணாமலையிலிருக்கும் பகவான்

ஸ்ரீ ரமண மகரிஷிகளின் சீடனும்,

ஷெ யூரில் யோகசமாதியடைந்த மகான்

சேஷாத்திரிஸ்வாமிகளின் டிராடியும்

பழனிமலை அன்னதான மகான் ஸாது சுவாமிகளின்

மாணாக்கனுமான

பழனி அவதூத மௌனம் சிதம்பரசுவாமியால்

காபி) ஸ்ரீ காளத்தியில் இயற்றப்பெற்றவை. (2000

உ

சிவமயம்



திருச்சிற்றம்பலம்.

ஓம். தத். சத்.

ஸ்ரீரமணகுருப்யோநம:

# ஸ்ரீ காளாத்தி யீசர் தோத்திர பதிகம்.




சொல்லாலுயர் சுருதிமறைகட்கு முடிவனே
சுயம்பிரகாசனே சுத்தநிர்மலவாசனே ஜோதிமயப்பிரகாசனே
கருணை நிருமயா அத்தனே ஆதிகயிலைவாசனே

சித்தர்கள் போற்றும் சிவனே சிவசண்முகனேயின்றவா
பக்த்தரெக்ஷக பரிபாலா பரசிவா பாலனேக்காப்பதுன்கடனே
காளாத்தியீசா கருணைபுரிவாய் இதுசமயம். (1)

சமயமது வேறில்லை சதுர்மறைமுதர்கடவுளே
சந்திபுகழ் வேதமுதல் மண்ணும் விண்ணும் போற்றும்
சதாசிவனே சைவமறை முழுமுதற்க்கடவுளே சகஸ்த்திர
தளமிசை வீற்றிருக்கும் சற்குணநேயனே ஓம் என்னும்
பிரணவமுடிவறிந்த உத்தமபாலனேயின்றபரனே
பஞ்சாக்ஷரூபனே பரிதியிலொளியின்றவா பரஞ்சுடரே
பாரோர்புகழும்பரமகுருபாநிதியேபக்ஷம்வைத்து பரிபாலிப்
பதுன்கடனே கருணைபுரிவாய் இதுசமயம்-காளாத்தியீசா, (2)

நீறணிபவளமேனி நிர்மலசொருபனே நித்தனே
அத்திமுகனையீன்றஅண்ணலே அருள்சுடரே ஆதியே
பக்தருக்கென்று பன்றிமாமிசமுண்டவா பரமனிருபாகரா
நித்தம் உன்றனைபோற்றுவர்க்கெல்லாம் நிதிஅளிக்கும் தேவா
அத்திமுதல் எரும்பு யீருகஉள்ளஅனைத்துனைக்கும்
ஆதரிக்கும் ஆதியே கயிலைவாசா கங்காதரா நித்தமுமுனை
பணிந்தேன்நேயா நின்கருணைகொண்டு கடாக்ஷிப்பாய்
இதுசமயம் நிறைஞ்சனப்பொருளே. (3)

பொருளொன்றறியா புல்லறிவாளர்க்கு நின்புகழ்கேட்க
கறைகொண்டு கடாக்ஷிக்கும் கர்த்தனே காளாத்தியீசா
சித்தர்கள் சேவிக்கும் சிவனே சென்னிமிசை சிறந்தபிறை
சூடியசுடரொளியே ஜோதியே சுயம்பிரகாசமாய்விளங்கும்

அத்தனே அத்தியையாக்ஷித்து அரவினை கடாக்ஷித்து ஆரமாய்
அரவணிந்தபரனே அரனே அடியேனையாதரிப்ப
துன் அன்பே அண்ணலே. (4)

அண்ணலே அன்னமளிக்கும் அரனே அன்பேவிண்ணிலே
நின்று விளையாடியவிமலா வேதநாயகா பண்ணிநேர்
மொழியாள்பாகா பசுபதியே பரனே பக்தர்கள்நேயா
பறையார்நேசனே. ரக்ஷித்துபணமுடியீய்ந்தபரனே கண்ணீர்
சோரக்கார்த்த கருணைக்கண்ணப்பரை கடாக்ஷீத்தகயிலைவாசா
சாளாத்தியீசா கார்ப்ப துன்கடனே இதுசமயம். (5)

சமயமது வேறில்லை சதாசிவா சற்க்குணநேயா சகஸ்
திரபோதா சாமவேதப்பிரியா சர்வபரிபூரணா நீமொருமுகும்

நிர்மலநிரைமகிருமய பித்தனே பெரும்பொருளே
அத்தனே அடியேனை ஆதரித்து ஆறுமுகன் அருள்பெருக
ஆதரிப்பாய் அயனுமாலும் தேடிக்காணாதஅண்ணலே
ஆதிகைலவாசா அன்புமிகுந்து அறவினைசூடியவா ஆதிகாளத்
தியீசா இதுசமயம்அடியேனை ஆதரித்துகாப்பதுன் கடனே (6)

காப்பதுன் கடனென்றே காளத்திவந்தடைந்தேன் சித்தம்
வைத்துசிலந்திக்கு அருளீந்தமைக்கண்ணுசெந்தீவண்ணு
சிவபிரகாசா சேவகனையீன்றசெல்வா செழுங்கமல நின்
சேவடிசூட்டி சிறுவனைக்காப்பதுன்கடனே கயிலவாசா
ஸ்ரீகாளாத்தியீசா இதுசமயம் நாறு மலர்கொண்டு நாடி
அர்ச்சிக்கும் நல்லன்பர்க்கு பாமலர் கொடுப்பாய
பார்வதியோர்பாகம் அமர்ந்தபரனே. (7)

பரனே பக்தர்கள்நேயனே பசுபதியே சித்தனேசெல்வனே
செழுஞ்சுடரே சிவனே சிவந்திமலர்சூடிய சிவப்பிரகாசனே
கர்த்தனே நித்தனே நிர்மலா நிரஞ்சனு நேயர்கள் நேசா
நின்கருணைவேண்டினேன் நிர்மலா சத்திஉமையாளோர்பாக
மமைந்தவனே அத்தியை ஆதரித்த அண்ணலேஅரனே அடி
யேனையும்ஆதரித்து சடாக்ஷிப்பாய் இதுசமயம்
கர்த்தனே காளாத்தி யீசா. (8)

தேடர்க்கறியதேனே திண்ணனார்மகிழும்தெளிந்த நறுஞ்
சுவைபாஞ்சுடரே சுத்தனே சுயம்பிரகாசா கர்த்தனே
காளாத்தியீசா பக்த்தர்கள்நேயா பஞ்சாக்ஷரம்சிபாபார்வதியோர்
பாகம் அமர்ந்த பாஞ்சுடரே சித்தனே செல்வ காளாத்தியீசா

நித்தமும் உனைப்பணிந்தேன் நிற்குணு நிதியளிப்பாய் நிறை
மதிசூடியசுதனே சுயம்பிரகாசனே சொற்பரம்சுடரொளியே
சுதமணியே, (9)

சுதமணியேகணகமணியே சுந்தரமணியே ஜோதியமணியே
ஆதிமணியே நிதிமணியே நிர்மலமணியே நித்தியமணியே
நேயர்கள்மணியே சத்காலந்தவருது உனையடைந்தோருக்கு
சாயுச்சயம் தரும்சகஸ்திரமணியே சாமியேயுனையடைந்தேன்
சர்வபரிபூரணு சதாகாலமும் கடாக்ஷிப்பாய்
இதுசமயம் ஸ்ரீ காளாத்தியீசா சிவ சிவா (10)

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஓம் தத் சத்.

ஸ்ரீ ரமணகுருப்யோநம:.

ஸ்ரீபழநி ஆண்டவர்சகாயம்.

# ஸ்ரீஞானம்பிகை அம்மையார் தோத்திரம்.

கல்லாதமொழியாது கருணைப்பிரகாசிக்கும் கருணை
திருவருளே நின்றந்தகமலதாக்ஷியே தாயே கலைவாணியே !
நில்லாதமையடைந்தோர்க்கு நேயம்வைத்தருள் கிருபா
நிதியே நித்தியகல்யாணியே நிரந்தரியே சுந்தரியே அத்தியை
ஆசரித்து அன்பளித்த ஆனுடதேவியே அம்பிகையே
ஞானம்பிகையே ஆதரி துகாப்பதுன் செயலே. (1)

செயலென் றுன்பாதம் தஞ்ஜமடைந்தேன் சித்தம்வைத்து
சிறப்பிப்பாய்செல்வியே சிவப்பிறகாசினியே கல்லாலடியுண்டு
கண்பெற்று கடாக்ஷீத்த காளாத்தியீசருடனமர்ந்தகனதன
தளமமர்தகாதலியே கமலவல்லியே காருண்யசெல்வியேதாயே
ஞானம்பிகையே கருணைவைத்துஆதரிப்பதுன்செயலே. (2)

வில்லாலடியுண்டு வேடனெச்சிலுண்டு சலியாதுமகிழ்ந்த
சர்வ்வதயாபரனுடனமர்ந்த தயா தாக்ஷிணியே தயாநிதியே
நில்லாது நீணையாது நேசிக்கும் ஏனழயேற்க்கு நிறைந்த
செல்வம் அளிக்கும்நேசியே விசுவாசியே நித்தியகல்யாணியே
நேசம்வைத்து கடாக்ஷித்தருளுவ துன்செயலென்று
நானுன்னடி பணிந்தேன் சத்தியம் தருமம் புகழ் சதாசிவ

மனோன்மணி தாயே ஞானாம்பிகையே கருணை வைத்து
ஆதரிப்ப துன்செயலே (3)

செயலேதுமிலாச்சிறுவனுக்கு செல்வம் சீர் கீர்த்தி
ஞானம் பறிபாலித்து நலம்கை யோசைகாட்டி நாவிற்
கடைபட்ட நாயேனுக்கு நஞ்சுண்ட யீசருடனமர்ந்த
அமிர்தகலைவாணியே அம்பிகைமய ஞானாம்பிகைதாயே
தஞ்சமென் றுனையடைந்தேன் தயைசெய்து ரெக்ஷித்துத்
தளரா தனம் தினம் தந்து ஆதரிப்பாய்
அம்பிகையே ஞானம்பிகைதாயே சரணம். (4)

அத்திமுதல் எறும்பு யீருக உள்ள அத்தனைக்கும் நித்தம்
படியளக்கும் நிறந்தரியே நித்தியகல்யாணியே சத்தினியே

சர்வதயாபரித்தாயே சகஸ்த்திரதளமிசை வீற்றிருக்கும்
தயாநிதியே பக்திக்கிரங்கி பாலகனை ரெட்க்ஷித் தம்பரமகல்
யாணியே பழநிபோலமுருகனையீன்றபாவதியே அம்பிகையே
ஞானம்பிகையேகருணைவைத்து ஆதரிப்பதுன்செயலே · (5)

ஆழிசங்கேந்தும் மாயனுட சகோதரியே அம்பிகையே
ஞானம்பிகைதாயே தர்க்கன் வேவ்விக்கு விஜயம்செய்த
வித்தகியே ஜோதியொளியீன்ற சுந்தரியே சுகுணநிதியு
டையாளே பாதியோர்பாகம் அமர்ந்த் பார்வதியேபரமேஸ்வரி
யேபாலனை இதுசமயம் கருணை வைத்துப சமுடன்
ஆதரிப்பது உன்செயலே.. (6)

நஞ்சரவம்பூண்டானை நாயகனுயுடையவளே பச்சை
நிறைத்தாளே பாங்கியர்க்குத்தலைவியே அத்திமுகவனையீன்ற
அம்பிகையே ஞானம்பிகையே சத்திகௌரி உமையே
சர்வ்வதயாபரியே சித்தமும் உனைத்தொழுவேன்
பக்ஷம்வைத்து ஆதரிப்பதுவும் உன்செயலே. (7)

ஜோதிப்பிரகாசினியே சுந்தரியே பாதிமணியணிந்த
பரமனுடபாகமமர்ந்தபார்வதியே பாலனைக்காப்பதுன்
கடனென்று காளாத்தி வந்தடைந்தேன் வாதுசெய்யாமல்
வாகாய் மனமகிழவந்தருள்செய்வாய்தாயே
ஞானம்பிகையே இதுசமயம். (8)

 

பிட்டுக்கு மண்சுமந்த பெரும்பெம்மானுமைதேவியே
பெரியநாயகியெனும் பெயர்கொண்ட வனத்தாளே
கும்பதனத்தாளே அத்தனுடன் வாதாடிய அழகு சுந்தரியே
நித்தியகல்யாணியேநிரந்தரசொரூபியே ஜெகமெல்லாம்
போற்றும் சேவற்கொடியோனை யீன்றசெல்வியே
சிவகாமி அம்மையே சிறுவனைக்காக்க இதுசமயம் வந்து
ஆதரிப்பதுன்செயலே அம்பிகையேஞானம்பிகைதாயே(9)

புவனமெல்லாம்போற்றும் பொற்கொடியே புவனேஸ்வரி
தாயே பொன்னுலகாண்டபுனிதவதியே பத்திமதிகொடுத்து
பொருப்புடன் விருப்பமாய் காக்கஇதுசமயம் கச்சை
விருதுடன் கட்கம்கொண்டு ஆதரித்திடுவாய்காசினிக்

கதிபதியே ஸ்ரீகாளாத்தியீசருடைய கஞானநிதிசெல்வியே
தாயே ஞானம்பிகை யம்மையே. (10)

சோலைசூழ்வனமெல்லாம்சுத்தித்திரிந்தலைந்தேன் ஸ்ரீசுந்தரியே
பாலையே, பட்சம்வைத்துகார்க்க பச்சைமயிலேறிவந்த பரம
குருபரனையீன்றபார்வதியம்மையே பயப்படாமல் ஆதரிக்க
இதுசமயம் ஆதிவாரம்தனில் அழகுடன் அலங்கரித்துவந்து
அன்பனைக்காப்பதும் உன்செயலே அம்பிகையே
ஞானம்பிகை கத்தாயே சரணம். (11)

முத்தணிந்த முல்லை நகைக்குழளாலே மூன்றும்வயதானே
முதல்வியே சத்திகௌரியே சாமா திறமணிதேவியே

சகஸ்திரதளமிசை வீற்றிருக்கும் சர்வலோகதயாபரியே
சவுந்தரியே சந்திகாலம் உனைதொழுவே சார்ப்பாய்வந்து
ஆதரிப்பதுன்செயலே அம்பிகையே ஞானம்பிகைதாயே
சரணம் திருச்சிற்றம்பலம் சுபம்.



# பொன்முகரி நதியின் பெருமை.



தண்டமிழ்முனிவன் தானும் தளமிசை வீற்றிருந்தோனே
போற்ற அண்டர்நாயகர்கிருபையால் அனலிடுமெழுகுபோல்
பஞ்சமா பாதகம் தீர்க்க பகீரதியென்னும் பண்புள்ளபாற
கெங்கையும் பாரினில் பரிபாலிக்க தோன்றினதே
தோன்றினதோர் கெங்கையில் துய்யமனத்துடனுட தோல்
வினையகலுமே தொல்வினையகலும் என்பதற்கு
துய்யமனத்தோன் சாக்ஷியாமே,

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஓம் தத் சத்.

ஸ்ரீ ரமணகுருப்யோநம:.

ஸ்ரீ பழனி ஆண்டவர் துணை.

# ஸ்ரீ முருகக்கடவுள் தோத்திரம்.

சீதப்புனல்வயல்சூழ் செந்தில்மேவிய சிவசுப்பிரமணிய
கடவுளை நித்தம் துதித்தேற்ற சத்தியம் தருமம் புகழ் கீர்த்தி
தயை தினம் தழைத்தோங்குமே. (1)

ஓராறுமுகவனை உத்தமிபாலனை சத்திபுதல்வனை சதாசிவன்
யீன்ற சரவணபவனை நித்தம் கைதொழுதால் சத்து சித்து
ஆனந்தமும் முன்னுஞ்ஜென்மஞ் சாபல்லியமு முண்டாமே(2)

வானவர்க்கு மேலானதேவனை வடிவேல்முருகனை நித்தம்
துதிசெய்தால் பக்தியும் கீர்த்தியும் பண்டைநாள் பதவியும்
பரிபாலிக்குமே. (3)
வள்ளி மணாளனை வாயாரவாழ்த்துவோர்க்கு ப்புள்ளிமயிலேறி
வந்து நித்தம்நித்தம் புனிதநாக்குபவனே. (4)
தண்டம கரம்கொண்டு தரணியெல்லாம் தானோடிவந்த
தண்டபாணியை நித்தம் கைதொழ நிர்ம்மல சுக
சாயுச்சம் கிடைக்குமே. (5)
கடம்பணிந்த கந்தனை கானவள்ளிமணாளனை காலைமாலை
நினைக்க நின்கற்ம்மவினை யகலுமே (6)
தெய்வயானை மணாளனை தேவேந்திரன் சகாயனை அந்திபகல்
அனவாதமும் துதிக்க செந்திபோல்செய்தவினை யகலுமே (7)
வேல்வீந்து வீரசூரபத்மனை தணிந்த வெற்றி வேலாயுத
கடவுளை நித்தம்கைதொழசுத்துசித் [illegible] ஆனந்தம்சதா விளையுமே

ஆரிருபுயக்தானே அனவாதமும்போற்றினல், பொன்னொடு
பொருளும் புகழ் கீர்த்தியும்•வாய்க்குமே. (9)

சத்திவேல்முருகனே சதாதியானிக்க பக்தியும்
பாரசெல்வமும்பதியும் பாக்கியமும் சித்திக்குமே. (10)

உ சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

ஓம் தத்சத்.

ஸ்ரீர ·ணகுருப்யோ நம:.

ஸ்ரீபழனிஆண்டவர் துணை

# விநாயககடவுள் தோத்திரம்

சோமசுந்திரகணேசனே சுந்தரிபாலனே பக்தியுடன்நித்தம்
வணங்குவோர்க்கு பக்தி பறி. ளிக்குமே. (1)

பர்தாள விக்ணவிஞயகக்கடவுளை பக்தியுடன் நித்தம்
தெரிசிப்போர்க்கு ஆதாயம் அனவாதமும் பறிபாலிக்குமே (2)

சச்திவிஞயகரை சதாதெரிசிப்போர்க்கு பக்தியும்
பாரசெல்வமும் பாறியினில் பறிபாலிக்குமே. (3)

அத்திமுகவனைநித்தம் தொழுவோர்க்கு பக்தியும்
வைராக்கியமும் பாறினில் பறிபாலிக்குமே. (4)

ஐந்துகாரத்தானை யானைமுகத்தவனைசந்திபொழுதில் சரணம்
புகுவோர்க்கு புத்தியும் பக்தியும் சித்தியும் பறிபாலிக்குமே (5)

கற்பகவிஞயகரை காலைமாலைகண்டுதெரிசிப்போர்க்
கெல்லாம் பாலைவனத்தில் பால் பழம் பறிபாலிக்குமே. (6)

நிர்த்தனகணேசனை நித்தம்தொழுவோர்க்கு நிதியொடு புகழ்
செல்வம் நித்தம்நித்தம் பறிபாலிக்குமே. (7)

ஓங்காரவிஞயகரை உண்மையாய்பணிவோருக்கு
பாங்காய்பரலோகம் சித்திக்குமே. (8)

அரசடி விநாயகரை அன்பாய்ப்பணிவோர்க்கு
நிரஞ்சன நிராமயவஸ்து நித்தம் சித்திக்குமே. (9)
வாலை கணபதியை வழிப்படுவோர்க்கெல்லாம்
வாக்கொடுசித்தியும் வானுலகமும் சித்திக்குமே. (10)



உ. சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஓம் தத்சத்.

ஸ்ரீ ரமணகுருப்யோநம:.

ஸ்ரீபழனிஆண்டவர் துணை.

# கும்மி

கும்மியடி பெண்காள் கும்மியடி பெண்காள் கும்மியடி யுங்கடி
(1) கும்பமுனி யருளாளே வந்த குணப்பெரும் புண்ணிய
பொன்முகரி தனை நாடி கும்மியடியுங்கடி, (கும்மி)
(2) ஆற்றோரம் ஆரசடிமேடையாம் அதின்பக்கம் ஆதி
விநாயகரும் அவரை அன்பாய்சேவித்து பாடிநாடி (கும்மி)
(3) சீர்சிறந்த சித்திர சோலைக்குள்ளே சிறந்த தோர் சிவ
லிங்கம கண்டேனடி கும்மியடிபெண்காள கும்மியடி (கும்மி)

(4) கண்ட சிலந்தி சிவலிங்கம் அது ஸ்ரீ காளத்தி யீசரடி பெண்ணே கும்மியடி பெண்காள் கும்மி. (கும்மி)

(5) காளத்தி யீசரை கால் எட்டுள்ள தாலியும் தன் நூலால் கட்டிய கனகமண்டபம் பாருங்களே. (கும்மி)

(6) மண்டபம் தன்னிலே மதுவுண்டு மதுவுண்டு களித்த குலஇனத்தோரின், மனம் நாடியதை பாருங்களே. (கு)

(7) மனம்நாடிமாமிசம் .படைத்தோனே மானே நீ கண்டாயோடி பெண்ணே. ( ..)

(8) கண்டாயோ பெண்ணே ,என்கண்ணே அவர் தான் கண்ணப்பர் · அடி ·பெண்ணே. (...)

(9) கண்ணப்பர் என்றாலே ஸ்ரீ காளத்தியீசருக்கே கட்டி கரும்புடன் கலந்த சுவைபாகுமோடி (..)

(10) சுவை பாகென்று சொல்லவே சொற்கமும் கிட்டுமடி. (கு)

(11) சொற்சம் கிட்ட சுந்தரி ஞானம்பாளுடன்
அத்தியை ஆதரித்தாரே அன்னமே பெண்ணே. (சுவாமி)

(12) அன்னமே அதிசயம் அனேகமாம ஆதிகைலாசமும்
இதுவேயாம் அதிலே ஆத்து நீரெடுத்த அத்தியுடன்
அரவினையும் அன்பாய் காத்தாரடீ. (...)

(13) காத்தவர் யாரென்று காணுவோம் வாருங்கடீ கூடீ நாடீ
காளாத்தியீசனை நாடீ. (...)

(14) செல்வம் சீர் கீர்த்தி தழைக்கவென்று ஸ்ரீ காளாத்தி
யீசனை நாடீ சேவித்து. (சு)

(15) நீரணி பவளமேனி நித்தனை அத்தனை சித்தனை
சதாசிவனை சதா சேவித்து நினைந்து. (...)

(16) சத்தியுடன் அமர்ந்த சதாசிவனை நித்தம்சேவித்து
நினைந்து நினைந்து. திருசிற்றமபலம். (...)

## திருவண்ணாமலை ஸ்ரீ[illegible]ணகுருநாதர்

...களுக்கும் குவசடம், ...

முறைபடி மூலிகைகளால் தயாரிக்கப்பட்ட செந்தூரம், பஸ்பம், தைலம், லேகியம் இவைகள் வியாதியஸ்தர்களை நேரில்பரீக்ஷித்து மருந்து கொடுக்கப்படும். தென்கைலாசமாயுள்ளதும் நக்கீரர், அகஸ்தியர், பாரத்துவாசர், சுகர் முதலிய சித்தபுருஷர்கள் யோகசமாதியடைந்து தவம்புரிந்த இந்த ஸ்ரீ காளாத்தி க்ஷேத்திரத்தின் ஸ்ரீ காளத்திமலை சாறலில்கிடைக்கும் மூலிகைகள் மூலமாய் மருந்துகள் தயாரிக்கப்பட்டுள்ளனவைகள்.

பழனி அவதூத மௌனம் சிதம்பரசுவாமி,
ஸ்ரீ காளாத்தியீசர்கோவில் மேலகோபுரமண்டபம்,
ஸ்ரீகாளாஸ்த்திரி.

---

☞ இப்புத்தகம் சிறுமண்ணியில் ஸ்ரீகாளாத்தி நால்வர்மடம் ஸ்ரீமத்வேலாயுதசுவாமிகள் இடமும் பெறலாம்.

---

பத்மாவதி அச்சயந்திரசாலை ஸ்ரீகாளாஸ்திரி.